REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு

**நடைமுறை**

நடைமுறைக்கு ஏற்றபடி செயல்படுவதும் ஒரு லட்சியத்தின்மீதுதான் கட்டப்படவேண்டும்.

-பேரறிஞர் அண்ணா







மலர்: 3 (●) சென்னை 21—6—1979 வியாழன் (★)❋●❋(★) வெளியூர் 22—6—1979 வெள்ளி (●) இதழ்: 243

## வறுமைக் கோட்டிற்கு கீழே உள்ள ஏழைகளைப் பற்றி சிந்தித்தே ஆகவேண்டும்

# புரட்சித் தலைவர் உணர்ச்சி உரை

**சென்னை, ஜூன் 21-"வறுமைக்கோட்டிற்குக் கீழே வாழ்கிறவர்களைப்பற்றி நாம் சிந்தித்தே ஆகவேண்டும். நல்லது நடக்கும் என்று ஏழை மக்கள் காத்திருக்கிறார்கள். ஏழைகள் வேறு முடிவு எடுத்தால் என்ன நிலை ஏற்படும் என்பதை சிந்தித்துப்பார்க்க வேண்டும்" என்று முதல்வர் புரட்சித்தலைவர் உணர்ச்சியுடன் எடுத்துக்காட்டினார்.**

தமிழ்நாடு சிறு தொழில் நிறுவன சங்கத்தின் வெள்ளி விழா சென்னை ஆப்ட்ஸ்பரி மாளிகையில் நடைபெற்றது.

வரவேற்புக் குழுத் தலைவர் ஆர். சி. குப்தா வரவேற்றுப் பேசினார்.

கைத்தறித் துறை அமைச்சர் சுப்புலட்சுமி சிறு தொழில் நிறுவன முன்னேற்ற ஆணையாளர் டாக்டர் ராம் கே. வேப்பா மாநில வங்கி நிர்வாக இயக்குனர் வி. எஸ். நடராஜன் ஆகியோர் உரையாற்றினர். மின்சாரத்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் சிறப்பு மலரை வெளியிட்டு உரையாற்றினார். மத்திய துணை நிதியமைச்சர் சதீஷ் அகர்வால் தொடக்கவுரையாற்றினார்.

முதல்வர்நிவாரணநிதிக்காக மத்திய அமைச்சர் சதீஷ்அகர்வால்ரூ10,000-ஐ முதல்வர் புரட்சித்தலைவரிடம்வழங்கினார். முதல்வர் புரட்சித்தலைவர் சிறு தொழில் வளர்ச்சி கண்டு முன்னேறியவர்களுக்கு கேடயங்களை வழங்கினார்.

புரட்சித்தலைவருக்கு சங்கத்தின் சார்பில் கேடயம் ஒன்று பரிசளிக்கப்பட்டது. முதல்வர் புரட்சித்தலைவர் தலைமைப் பேருரையாற்றினார்.

அப்போது அவர் கூறியதாவது:

இங்கே குறிப்பிட்டவர்கள் அவர்களுடைய கருத்துரைகள் அனைத்தையும் ஒட்டுமொத்தமாக இந்தியத்துணைக் கண்டத்தின் எதிர்கால நல்வாழ்வுக்கு அக்கறை காட்டும் வகையில் தங்களுடைய எண்ணத்தை வெளியிட்டார்கள்.

முதலிலேயேநான் தமிழ்நாடு சிறுதொழில் அதிபர்கள் முன்னவர்கள் ஆகியோர்களின் தலைவராகிய பார்த்தசாரதியைக் கேட்டுக் கொள்வதெல்லாம் நாளைய தினம் விவாதத்தில் என்னென்ன கருத்துக்கள் வெளியிடப்படுகின்றனவோ அவற்றை நாடாவில் பதிவு செய்து அரசுக்கு அனுப்பி வைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

ஏனெனில், அதைப் போன்றகருத்துகள்அரசில் நிரந்தரமாக பத்திரமாக பாதுகாத்து வைக்க வேண்டிய ஒன்று. பத்து அல்லது இருபது ஆண்டுகளுக்கு பிறகு நமது நாட்டின் நிலை நாம்எதிர்பார்த்ததுபோல வளர்ச்சியடைந்து மகிழ்ச்சியோடு மக்கள் வாழும் நிலை ஏற்படுமேயானால் அந்தநேரத்தில் நாளைய தினம் பேசுகிறவர்கள் தெரிவிக்கிற யோசனைகள் கருத்துக்கள் நுணுக்க விவரங்கள் தொழில்முறைகள் இவைகளையெல்லாம் அப்போது யார் பதவியில் இருக்கிறார்களோ அவர்கள் இவ்வளவு ஆண்டுகளுக்குள் எவ்வளவு நிறைவேற்றியிருக்கிறோம் என்பதைப் புரிந்துகொள்ள முடியும்.

### யோசனை கூறுங்கள்

நாளையதினம் தொடங்கும் விவாத அரங்கில் பல்வேறு கருத்துக்களைக் கூற வந்திருக்கிறீர்கள். மத்திய துணைமந்திரியவர்கள் கூறியது போல் ஒரு மாநிலத்தில் நடப்பது போல இல்லாமல் அகில இந்தியாவிலும் இருந்து வந்திருக்கிறவர்கள் கலந்து கொள்ளும் மாநாடாக தோற்றம் அளிக்கிறது. அதை சரிவர பயன்படுத்திக் கொள்ளும் போது நாம் எதற்காக-எந்த நோக்கத்துக்காகவந்திருக்கிறோமோ அதிலிருந்து சிறிதும் வழுவிவிடக் கூடாது என்று பணிவோடு வேண்டிக் கொள்கிறேன்.

நம்முடைய கணிப்புக்கு குறைவாக காரியங்கள் செயலாக்கப்பட்டிருந்தால் அதை துரிதமாக மேற்கொள்ளவும் ஓரளவுக்கு எல்லையைஎட்டிவிட்டோம் என்றிருந்தால் போதியனவற்றைப் பெற முயற்சி செய்யவும் பயன்படும்.

அதுமட்டுமல்ல; பதவியிலிருக்கிறவர்கள், நிறைவேற்ற வேண்டிய அதிகாரிகள் ஆகியோர் தங்களுடைய பணியை சிறப்பாக செய்வதற்கு வாய்ப்பாகவும் வசதியாகவும் இருக்கும். எனவே தான் இவ்வளவு அக்கறையாக கேட்டுக் கொள்கிறேன்.

மத்தியதுணை நிதிமந்திரி பேசும்போது 5000 கிளைகள் இருக்கின்றன. இன்னும் மூன்றாண்டுகளில் 5000 கிளைகள் தோன்றும் என்றார். இப்போது கூட்டுறவு என்கிற வகையில் விவசாயிகளுக்கு கடன் தரப்படுகிறது.

துணைநிதி மந்திரி, நிதி மந்திரியிடமும் இந்திய பேரரசிடமும் சொல்லி சிறு தொழில்களுக்குக் கடன் கொடுக்க தனியாக ஒரு பிரிவு அமைத்து அதற்கென்று விதிமுறைகளை அமைத்து நிதி ஒதுக்கீடுசெய்தால் மிக பயனுள்ளதாக அமையும். இதை அவர்கள் சிந்தித்து ஆவன செய்வார்கள் என்று நான் நம்புகிறேன்.

பிரச்சினைகள் நிறைய இருக்கின்றன. குறிப்பாக சிறு தொழில்கள் தொடங்குபவர்கள் பல்வேறுதுறைகளில் அனுமதி பெற வேண்டிய நிலைமையிலே இருக்கிறார்கள் பல கஷ்டங்களை ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது.

இதை முன்பு ஒரு முறை தொழில் அதிபர்களைச் சந்தித்த போது சில நண்பர்கள் கூறினார்கள்.

அதை மாற்றியமைக்க வேண்டிய வகையில் சில நிலைமைகளை உருவாக்க நாங்கள் முன் வந்திருக்கிறோம்.

சிறு தொழில் முனைவர்கள் நகராட்சியிலும் ஊராட்சியிலும் உரிமம் பெறவேண்டுமென்றால் முக்கியமாக மூன்று இலாக்காக்களில் இருந்து அனுமதி பெற வேண்டும். நகர்ப்புறம் மற்றும்கிராமப்புறஇயக்குநர் அலுவலகம், தொழில் துறை அலுவலகம், சுகாதாரத்துறை ஆகியவற்றிடம் அனுமதி பெற்றாக வேண்டும்.

தொழிற்பேட்டை பகுதி

(2-ம் பக்கம் பார்க்க)

---

### தி. மு. க. வினர் அட்டகாசம்

## கோவை பொன்னுசாமி

# படுகொலை

### குழந்தைவேலு விரைந்தார்

**கோவை, ஜூன் 21- கோவை மாவட்ட அண்ணா ஆட்டோ ரிக்ஷா தொழிலாளர் சங்க பொதுச் செயலாளர் பொன்னுசாமியை தேர்தலில் தோல்வி கண்ட திமுக வெறியர்கள் துடிக்கத்துடிக்க குத்திக் கொன்றனர். அவர் கொலை செய்யப்பட்ட செய்தி கிடைத்ததும் அமைச்சர் குழந்தைவேலு கோவைக்கு விரைந்து சென்று இரங்கல் தெரிவித்தார்.**

கோவை மாவட்ட அண்ணா ஆட்டோ ரிக்ஷா தொழிலாளர் சங்க பொதுச் செயலராகவும், "சிரித்து வாழவேண்டும்" எம்.ஜி.ஆர். மன்றச் செயலாளராகவும் இருந்து வந்த கழகக் கண்மணி பொன்னுசாமி நாகப்பட்டினம் தேர்தலில் பம்பரம் போல்பணியாற்றியசெயல் வீரர் ஆவார்.

20க்கு மேற்பட்ட ஆட்டோ ரிக்ஷா தொழிலாளர்களுடன் நன்னிலம் தொகுதிக்குச் சென்று கழக வேட்பாளர் மகாலிங்கத்துக்கு ஆதரவாக இரவு பகல் பாராதுபாடுபட்டவர்.

பொன்னுசாமியின்தீவிர கழகப் பணிகளைக் கண்டு பொறுக்க மாட்டாத திமுக வெறியர்கள் நெடுநாட்களாகவே அவர் மீது ஆத்திரம் கொண்டிருந்தனர்.

நாகைத்தேர்தலில்அவர் பிரச்சாரப்பணிகளில் ஈடுபட்டிருந்ததைத் தொடர்ந்து அவர் மீது திமுகவினரின் ஆத்திரம் மேலும் அதிகமாயிற்று.

நேற்று நள்ளிரவு 12 கோவை செட்டி வீதியில் அவரை திமுக வினர் கத்தியால் குத்தினர்,

ரத்த வெள்ளத்தில் துடிதுடித்து தோழர் பொன்னுசாமிபிணமானர் சிறந்த செயல் வீரரும் பேச்சாளருமான பொன்னுசாமியின் மறைவுச் செய்தி கேட்டு கழகத் தோழர்கள் துயருற்றனர்.

தகவல் அறிந்ததும் அமைச்சர் குழந்தைவேலு கோவைக்கு விரைந்தார்.

"சிரித்து வாழவேண்டும்" எம்.ஜி.ஆர்.மன்றத்தில் பொன்னுசாமியின் சடலம் பொதுமக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டது.

அமைச்சர் குழந்தைவேலு, கொள்கைபரப்புச் செயலாளர் திருப்பூர்மணிமாறன் எம். எல். ஏ., மாவட்ட அமைப்பாளர் கோவைத்தம்பி, தொழிற் சங்க பிரிவு செயலாளர் வை. பெருமாள் யு. ஆர்.கிருஷ்ணன், கருப்பசாமி, சண்முகசுந்தரம், பிரபாகரன் மருதாசலம் எம். எல். ஏ. ஆகியோர் உட்பட ஏராளமான தோழர்கள் சென்று இறுதி அஞ்சலி செலுத்தினர்.

இன்று பிற்பகல் சவ ஊர்வலம் நடக்கிறது.

### மணிமாறன் கண்டனம்

கழக கொள்கை பரப்புச்

(8 ம் பத்தி பார்க்க)

---

## கோவை பஞ்சாலைத் தோழர்களுக்கு அவசர அழைப்பு

கோவை மாவட்ட அண்ணா பஞ்சாலை தொழிற் சங்க கிளை நிர்வாகிகள் கூட்டம் 24-6.79 காலை 9 மணிக்கு கோவை ஆர். எச். ஆர் விடுதியில் நடைபெறும் வை. பெருமாள், யு.ஆர். கிருஷ்ணன் எம். பி. கலந்துகொள்வர் கிளை நிர்வாகிகள் தவறாது கலந்துகொள்ள வேண்டுகிறேன்.

நா. கருப்பசாமி
கோவை மாவட்ட அண்ணா பஞ்சாலை அண்ணா தொழிற்சங்க செயலாளர்

---

2ம் பத்தித் தொடர்ச்சி

செயலாளர் திருப்பூர்மணிமாறன் விடுத்துள்ள அறிக்கையில்கூறிஇருப்பதாவது:

தஞ்சை தேர்தலில் படுதோல்வியுற்ற தி. மு. க. வினர் வன்முறையைக் கட்டவிழ்த்துவிட்டுள்ளனர் கோவை மாவட்டத்தில் பல இடங்களில் இது போன்ற வன்முறைச் செயல்களை திமுக வினர் நடத்துகிறார்கள்-

திருப்பூரில் கழகத் தோழர் அங்கமுத்துவைத் தாக்கினார்கள். மருத்துவமனையில்அவர் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

கோவையில் பொன்னுசாமியைக் கொன்று ரத்தவேட்கையைத் தீர்த்திருக்கிறார்கள்.

மாவட்டம் முழுவதிலும் புரட்சித்தலைவர் பெயரிலுள்ள மன்றங்களைத்தாக்குவதிலும், கழகக்கிளைகளைத் தாக்குவதிலும் தி. மு. க. வன்முறையாளர்கள் ஈடுபட்டுள்ளனர், கம்யூனிஸ்டுகளும் அவர்களோடு சேர்ந்து இந்த வன்முறையில் இறங்கியுள்ளனர்.

இவ்வாறு திருப்பூர் மணிமாறன் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

---

# புரட்சித்தலைவரிடம் வாழ்த்துபெற்றார், தஞ்சை வீரர் சிங்காரவடிவேலு

**சென்னை, ஜூன் 21- தஞ்சை நாடாளுமன்ற தொகுதி உறுப்பினராகத் தேர்ந்து எடுக்கப்பட்ட சிங்காரவடிவேலு நேற்று மாலை முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்து மாலை அணிவித்து வணங்கி நன்றி தெரிவித்தார்.**

சிங்காரவடிவேலுவை முதல்வர் புரட்சித்தலைவர் கட்டித்தழுவி ஆசி கூறினார்.

தஞ்சை நாடாளுமன்ற இடைத்தேர்தலில்வெற்றி பெற்ற இந்திராகாங்கிரஸ் வேட்பாளர் சிங்காரவடிவேலு முதல்வர் புரட்சித்தலைவரை நேற்று சந்தித்தார்.

இந்தச் சந்திப்பு நேற்று மாலை மாம்பலம் அலுவலகத்தில் நடந்தது.

சிங்காரவடிவேலு நேற்று காலை சென்னைவந்து சேர்ந்தார். நேற்று மாலை காங்கிரஸ் தலைவர் மூப்பனாருடன் அடையாறில்உள்ள மல்லிகை இல்லம் சென்று அங்கிருந்து அமைச்சர் எஸ்-டி,எஸ்.சை அழைத்துக்கொண்டு மாம்பலம் சென்றார்.

மாம்பலம் அலுவலகம் வந்தபோது அமைச்சர் சுப்புலட்சுமி வரவேற்று அழைத்துச் சென்றார்.

திண்டிவனம் ராமமூர்த்தி, எஸ். கே. டி. ராமச்சந்திரன், தஞ்சை தண்டாயுதபாணி, கே. ஆர். நடராஜ் ஆகியோரும் அப்போது வந்தனர்.

காங்கிரஸ் தலைவர் மூப்பனாரை முதல்வர் புரட்சித்தலைவர் கை குலுக்கி வரவேற்றார்.

வெற்றி வீரர் சிங்காரவடிவேலுவை புரட்சித் தலைவர் கட்டித்தழுவி ஆசி கூறினார்.

முதல்வர் புரட்சித்தலைவருக்கு மூப்பனார் மாலை அணிவித்து நன்றி தெரிவித்துக்கொண்டார்.

அதன்பிறகு சிங்காரவடிவேலுவும்முதல்வருக்கு மாலை அணிவித்து வணங்கி ஆசிபெற்றார்.

சிங்காரவடிவேலுவுக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் மாலை அணிவித்து வாழ்த்துக்கூறினார்.

சிங்காரவடிவேலுவுக்கு முதல்வர் மாலை அணிவித்து ஊழல் புரியாத

(2ம் பக்கம் பார்க்க)

தஞ்சை வெற்றிவீரர் சிங்காரவடிவேலுமுதல்வர் புரட்சித்தலைவரைச் சந்தித்து வாழ்த்துப்பெற்றார் படத்தில் புரட்சித்தலைவருடன். அமைச்சர்கள் எஸ் டி. எஸ்., திருமதி சுப்புலட்சுமி, கருப்பையா மூப்பனார், வெற்றிவீரர் சிங்காரவடிவேலு ஆகியோர் உள்ளனர்.

---

# விபத்தில் இறந்தவர் குடும்பத்துக்கு உதவி: முதல்வர் உத்தரவு

**சென்னை, ஜூன் 21- விபத்தில் சிக்கி இறந்தவர்களின் குடும்பத்துக்கு முதலமைச்சர் நிவாரணநிதியிலிருந்து தலா 1000 ரூபாய் கொடுக்க முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார்.**

விபத்தில் சிக்கி அகால மரணம் அடையும் நபர்களின்குடும்பத்தைச்சேர்ந்தவர்களுக்கு முதல்வர் நிவாரண நிதியிலிருந்து உதவித்தொகை வழங்கப்படும் என்று தமிழக அரசு ஏற்கனவே அறிவித்து இருந்தது.

அதன்படி முதல்மைச்சர் நிவாரண நிதியில் இருந்து நிதியுதவி செய்யப்பட்டு வருகிறது.

தருமபுரி மாவட்டம் அரூர் தாலூக்கா பி.மல்லபூர கிராமத்தைச் சேர்ந்த நஞ்சப்பசெட்டி அந்தகிராமத்தில் வெடி விபத்தில் மரணமடைந்தார். அவரின் மனைவி காளியம்மாள் முதல்வர் நிவாரண நிதியிலிருந்து 1000 ரூபாய் உதவித் தொகை பெற்றுக் கொண்டார்.

மதுரை மாவட்டம் உத்தமபாளையம் தாலூகா கம்பம் நகரைச் சேர்ந்த கருப்பாயி அம்மாள் வீட்டில் திடீரென்று தீவிபத்து ஏற்பட்டது. தீப்பிடித்து எரிந்த வீட்டில் நுழைந்து தனது மகளைக் காப்பாற்றினார்.

அப்போது கருப்பாயி தீக்காயம் அடைந்து இறந்து போனார், கருப்பாயியின் மகள் பஞ்சம்மாள்உதவித் தொகையைப் பெற்றுக் கொண்டார்.

மின்சார விபத்தில் சிக்கி உயிரிழந்த தென் ஆற்காடு மாவட்டம் காட்டுமன்னார் கோவில்தாலூகா ஆட்கொண்ட நாதம்கிராமத்தைச் சேர்ந்த அப்பாதுரையின் குடும்பத்துக்கும் 1000 ரூபாய் வழங்கப்பட்டது.

கோவை மாவட்டம் மேட்டுப்பாளையம் துணை தாலூகா கெடயம்பாளையம் கிராமத்தைச்சேர்ந்த பத்ரன் ஒருவிபத்தில்சிக்கி, வேலைசெய்து பிழைக்க முடியாத அளவு உடல் ஊனமுற்றார். அவருடைய குடும்பத்திற்கும்500ரூபாய் முதல்வர் நிவாரண நிதியிலிருந்து வழங்கப்பட்டுள்ளது.

---

## அமைச்சர் கே. ஏ. கே. நிகழ்ச்சிகள்

ஜூன் 23- கோவை கிணத்துக்கடவு கருத்தரங்கு. 24: கன்னியாகுமரியில் செலக்ட்கமிட்டி, 25: நாகர்கோயில்நிகழ்ச்சிகள். நெல்லை நிகழ்ச்சிகள். பேட்டை கூட்டுறவு நூற்பாலை பத்தமடை பாய் நெசவாளர் கூட்டுறவு சங்கம் சாத்தூர் தீப்பெட்டி கூட்டுறவு ஆகியவற்றை பார்வையிடுதல்.

27 காலை: மதுரை பிற்பகல் பட்டிவீரன்பட்டி உத்தமபாளையம்.

28 பிற்பகல் விருதுநகர் வெள்ளிப்பட்டினம்.

29 மதுரை கூட்டுறவு மத்திய வங்கி, கோட்ஸ் ஊழியர் கூட்டுறவு பார்வையிடுதல்.

30 சென்னை.

---

இந்திய தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகம்
சென்னை

### திருத்தம்

தமிழ்நாடு, வடஆற்காடு மாவட்டம், வேலூர், கோட்டையில் உள்ள பாதுகாக்கப்பட்ட பகுதியைச் சுற்றிலும் வேலி (Fencing) அமைப்பதற்காக S,R.க்காக பொருட்கள் சப்ளை செய்வதற்கான டெண்டர்கள் அளிப்பது குறித்து இந்த பத்திரிகையின் 19-5-79 தேதி இதழில் வெளியிடப்பட்ட davp 511 (29)79ன் விளம்பரத்தின்படி டெண்டர் பத்திரம் விற்பனை 16-7-79 மாலை 2 மணி வரையும் டெண்டர் பெற்றுக் கொள்ளும் தேதி 17-7-79 வரையிலும் நீடிக்கப்பட்டுள்ளது. டெண்டர் அதே தினம் மாலை 3 மணிக்கு திறக்கப்படும். இதர நிபந்தனைகளில் மாற்றம் ஏதுமில்லை.

davp-511(47)79

---

# முதல்வர் புரட்சித்தலைவர் உணர்ச்சி உரை (1-ம் பக்கத் தொடர்ச்சி)

களில் குறிப்பிட்ட சில தொழில்களைத் தவிர மற்றவைகளுக்கு சுகாதாரத் துறையிடத்தில் முன் அனுமதி தேவைப்படாது. அதே போல் அறிவிக்கப்பட்ட தொழில் பகுதிகளில் 25 பரித்திறனுக்கு மேற்படாத தொழிற்சாலைகள், நகர் மற்றும் கிராம தொழில் இயக்குனரின் முன் அனுமதி இல்லாமலேயே தொழில் தொடங்கலாம்.

ஐந்து பரித்திறனுக்கு குறைவாக செயல்படும் குடிசைத் தொழில்களை சுகாதாரத்துறையின் முன் அனுமதி இன்றி ஆரம்பிக்கலாம். எனவே கிராமத் தொழில்களுக்கு அந்தந்த ஊராட்சி ஒன்றியங்கள் நகராட்சி தவிர வேறு எந்தத்துறையினர் அனுமதியும் வேண்டியது இல்லை.

கிராமப்புறங்களில் விவசாயத் தொழில்களை மட்டுமே நம்பி இருக்கவேண்டிய நிலை இருக்கிறது. திரும்பத் திரும்ப நகர்ப்புறங்களிலே நாம் சிறு தொழில்களை தொடங்க வேண்டிய நிலை இருக்கிறது. அதை மாற்றி அமைக்கவேண்டும்.

கிண்டி பொறியியல் கல்லூரியில் படித்த ஒருவர் இன்று சிங்கப்பூரிலே மிக மிக நுணுக்கமான கருவிகளை தயாரிக்கும்நிறுவனத்தில் செயல்பட்டுபுகழோடு இருக்கிறார். இங்கே அறிவுக்குப்பஞ்சம் இல்லை. வசதிக்குத்தான் பஞ்சம்.

நம்மிடம்திறமை, அறிவு பொறியியல் நிபுணத்துவம், ஆர்வம், அக்கறை வேகம், விவேகம் இருக்கிறது. ஆனால் வாய்ப்புகளும் வசதிகளும்தான் இல்லை. இதைக் கண்டு மனம்வேதனையடைகிறது. இவைகளை ஒழுங்குபடுத்தினால் நிச்சயம் நம்நாடு சிறந்துவிளங்கும்.

பணத்தை தனியாக சேர்த்துவைக்காமல் வங்கியிலே போடுவதால் அது தொழில் வளர்ச்சிக்கும் உதவுவதோடு பணம் போடுவோர்க்கும் ஓரளவு லாபம் கிடைக்கும்.

காகிதஆலைகளில்கிடைக்கும் மரக்கூழை வெளியே விற்று கொள்ளை லாபம் சம்பாதிக்கிறவர்கள் இருக்கும்போது பொதுமக்கள் லாபம் அடைய முடியாது.

விவசாயிகள் மட்டும்சில காலம்வேலையின்றி இருப்பதில்லை. இன்னும்எவ்வளவோ பேர் வருடத்தில் 30 அல்லது 40 நாட்கள் மட்டுமே வேலை செய்து மற்ற நாட்களில் வேலையின்றி இருக்கிறார்கள். அதுவும் குறைந்த அளவு கூலி பெறுகிறார்கள். அவர்கள் வாழ்க்கையை வளம் பெறச் செய்ய வேண்டும். துணை நிதியமைச்சர் கூறியது போன்று வறுமைக்கோட்டின் கீழே வாழ்கிறவர்களை நாம் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

குடிசைத் தொழில் போன்ற கிராமத்தொழில்கள் தோன்றி வளர்ந்தாலன்றிஅவர்களுக்குவாழ்வு கிடையாது. பாதுகாப்பு கிடையாது. இதை சிறு தொழில் முனைவர்கள்எண்ணிப் பார்த்து செயல்பட வேண்டும்.

நான் அழகாகபேசுவதற்காக வார்த்தைகளைத்தேடவில்லை. உணர்ச்சிபூர்வமாக என் கருத்துக்களை உங்களிடத்தில் தெரிவிக்கத்தான் இப்படிச் சொல்கிறேன்.

நான்பதவியேற்ற பிறகு இந்திய அரசு கிராமப்புற முன்னேற்றத்திற்கு நாங்கள் எந்த யோசனைகளை சொன்னாலும் மத்திய அரசுஅதைமறுக்கவோ ஒத்துழைப்புத் தரமுடியாது என்றோ இதுவரையில் சொல்லவில்லை. அதைப் போலவே தொழில் முனைவர்களுக்கு தனியாகக் கடன் கிடைக்க என்று ஒரு தனிப்பிரிவு அமைத்துத்தர வேண்டுமென்று மீண்டும் நான் கேட்டுக் கொள்கிறேன்.

நமக்கு நல்லது செய்வார்கள் என்று ஏழை மக்கள் காத்திருக்கிறார்கள். நாமே எடுத்துக்கொண்டால் என்னஎன்ற நிலைக்கு அவர்கள் வந்துவிட்டால் என்ன நிலை இந்த நாட்டிலே ஏற்படும் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

தேர்தல் பிரச்சாரத்துக்காக நான் சென்றபோது இதைக்கண்டேன். இதை நான் வெளிப்படையாகக் கூறுவதற்கு காரணம் உங்களை-ஏன் என் மனசாட்சியையும் ஏமாற்ற விரும்பாததுதான்.

இந்த சிறு தொழிலில் என்னென்ன இடையூறுகள் உள்ளன என்பதைப் பற்றி நாளைய தினம் விவாதித்து பேசிக் கூறுங்கள்.

தமிழக அரசை பொறுத்தவரையில்சிறுதொழிலுக்கு எந்தெந்த வகையில் துணை நிற்க முடியுமோ அந்த அளவுக்கு எங்களின் ஆதரவு உண்டு.

உங்கள் எண்ணத்தின் பிரதிபலிப்பாக இருப்போம். உங்கள் எண்ணத்தை ஏற்றுக்கொள்ளலாம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் உரையாற்றினார்.

சிறுதொழில் நிறுவனத் தலைவர் சி. ராமச்சந்திரன் நன்றி கூறினார். கைத்தறி ஆடை அலங்கார அணிவகுப்பு ஒன்று அமைச்சர் சுப்புலட்சுமி, தமிழக சிறப்புப் பிரதிநிதி க. ராசாராம் மத்திய அமைச்சர் சதீஷ்அகர்வால் ஆகியோர் முன்னிலையில் நடைபெற்றது.

இதையொட்டி அமைக்கப்பட்டிருந்த கண்காட்சியினையும் முதல்வர்புரட்சித் தலைவர் தொடங்கி வைத்தார். விழாத்தொடக்கத்துக்கு முன்னதாக கண்காட்சியைபுரட்சித்தலைவர் பார்வையிட்டார்.

---

## மதுரை இளவரசன் எம்.சி நிகழ்ச்சிகள்

ஜூன். 26-ஆண்டிப்பட்டி, 28-காரமங்கலம், 29.30-கோவை மாவட்டம்,

ஜூலை. 1. 2- சிவகெங்கை தொகுதி,

---

## மாநகராட்சி கழக உறுப்பினர் கூட்டம்

வருகிற 24-6-79 அன்று மாலை 4 மணி அளவில் மாநகராட்சி கழக உறுப்பினர் கூட்டம் வணக்கத்திற்குரிய மேயர் முத்தண்ணன் அவர்கள் முன்னிலையில் வணக்கத்திற்குரிய துணை மேயர் கே. எஸ். சந்தானம் அவர்கள் தலைமையில் நடைபெறுவதால் கழக உறுப்பினர்கள் அனைவரும் தவறாது வருகைதர வேணுமாய் அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

க. இளவரசன்
கொறடா
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.
மதுரை மாநகராட்சி

---

# தமிழ் நாடு பரிசுச் சீட்டு
## 23வது குலுக்கல் முடிவுகள்

குலுக்கல் நாள்: 20.6.79
இடம்: இராஜாஜி மண்டபம், சென்னை-600 002.

DK வரிசை — DL வரிசை — DM வரிசை

**2 முதல் பரிசுகள் தலா ரூ. 50,000**

027496 848587 669349 989866 786945 886319

**4 ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 1000**

027495 027497 669348 669350 786944 786946
848586 848588 989865 989867 886318 886320

**3 இரண்டாவது பரிசுகள் தலா ரூ. 10,000**

471258 721697 758111 057697 825863 869418 112198 222304 322742

**6 ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 500**

471257 471259 721696 057696 057698 825862 112197 112199 222303
721698 758110 758112 825864 869417 869419 222305 322741 322743

**5 மூன்றாவது பரிசுகள் தலா ரூ. 5,000**

063732 247602 741291 169769 189520 374946 306419 342760 428875
853480 948507 679363 787939 892546 946882

**பத்து ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 300**

063731 063733 247601 169768 169770 189519 306418 306420 342759
247603 741290 741292 189521 374945 374947 342761 428874 428876
853479 853481 948506 679362 679364 787938 892545 892547 946881
948508 787940 946883

**25 நான்காவது பரிசுகள் தலா ரூ. 1000**

003742 030677 054505 003391 090656 129198 020776 056109 076593
064531 084365 088279 144318 180512 185616 165922 180166 240471
099493 126532 132282 235915 247712 276951 337935 337941 392637
188461 207143 250056 282817 284016 376635 468762 481999 622240
330432 371633 598433 381089 431928 487595 636613 644139 645739
629785 674837 706618 519975 522699 715583 682940 743327 750428
733898 740665 844139 790996 847867 935408 752715 796938 854493
849933 881231 923021 944903 956936 979593 871430 889910 945612
954516 982925 987909

**100 ஐந்தாவது பரிசுகள் தலா ரூ. 50**
பின் கண்ட ஐந்து எண்களுடன் முடியும் சீட்டுகளுக்கு

07656 10602 23523 23617 39390 47285 22338 22497 31513
24544 34508 60841 50629 58132 62800 34473 49712 60799
73347 77319 79777 63328 71228 75816 66403 72518 76528
83713 86326 84334

**500 ஆறாவது பரிசுகள் தலா ரூ. 100**
பின் கண்ட நான்கு எண்களுடன் முடியும் சீட்டுகளுக்கு

3610 4842 6443 0900 0961 3230 0459 4435 7467
7748 8421 8011 8751 7641 9728

**2 ஆயிரம் ஏழாவது பரிசுகள் தலா ரூ. 50**
பின் கண்ட மூன்று எண்களுடன்முடியும் சீட்டுகளுக்கு

164 381 226 528 211 591

### பரிசுத்தொகை வழங்கும் இடங்கள்

ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேற்பட்ட பரிசுத் தொகைகளும் — தமிழ்நாடு பரிசுச்சீட்டு இயக்குநர், அரசினர் தோட்டம், சென்னை - 600 002.

ரூபாய் பத்தாயிரத்திற்குக் குறைவான பரிசுத் தொகைகள் (மூன்றாவது முதல் ஏழாவது பரிசு வரை) — தமிழ்நாட்டிலுள்ள ஏதேனும் ஒரு கிளைக் கருவூலம்.

### குறிப்பு

செய்தித் தாள்களில் வெளியிடப்பட்டுள்ள குலுக்கல் முடிவுகளில் ஏற்படும் அச்சுப் பிழைகளுக்கு இவ்வலுவலகம் பொறுப்பல்ல. பரிசு பெற்றவர்கள் தமிழக அரசின் அதிகாரபூர்வமான அரசிதழில் பரிசு பெற்ற எண்களை சரிபார்த்துக் கொள்ளலாம். அரசிதழ் பெற்றுக் கொள்ள விரும்புவோர் ரூபாய் 1.20 மட்டும் மணியார்டர் மூலம், விற்பனை அதிகாரி, அரசாங்க வெளியீட்டு அலுவலகம், 817, அண்ணாசாலை, சென்னை - 600 002 என்ற முகவரிக்கு அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். குலுக்கல் நடைபெற்ற நாளிலிருந்து பத்து நாட்கள் கழித்து அரசிதழ் கிடைக்கப்பெற்றவுடன் பரிசுத் தொகை கருவூலங்களில் வழங்கப்படும்.

## பரிசுத்தொகை பெறவேண்டிய கடைசி நாள்: 19-7-79
(குலுக்கல் நடைபெற்ற நாளிலிருந்து ஒரு மாதத்திற்குள்)

வருமான வரிச் சலுகைக்கு சிறுசேமிப்புத் திட்டங்களில் முதலீடு செய்யுங்கள்!

விபரங்களுக்கு மாவட்ட ஆட்சியாளர்கள் மற்றும் இயக்குனர் சிறுசேமிப்புத்துறை சென்னை - 600 002

அடுத்த குலுக்கல் (24வது குலுக்கல் : 20-7-79
மொத்த வரிசைகள் : 4. டிஎன், டிஓ, டிபி & டிக்யூ
இரண்டு முதல் பரிசுகள் ரூ. 50,000 வீதமும் மற்றும் ஏராளமான பரிசுகளும்.

மொத்த பரிசுத்தொகை : ரூ. 15,60,000
மொத்த பரிசுகள் : 10,620
பரிசுச்சீட்டின் விலை : ஒரு ரூபாய் மட்டும்

தமிழ்நாடு பரிசுச்சீட்டு இயக்குநர்,
அரசினர் தோட்டம,
சென்னை - 600 002.

---

# புரட்சித்தலைவரிடம் சிங்காரவடிவேலு ஆசி

(முதல் பக்கத் தொடர்ச்சி)

நல்லதம்பியாக இருக்க வேண்டும் என்று ஆசி கூறினார்.

இதன் பிறகு முதல்வர் புரட்சித்தலைவருடன் மூப்பனாரும் சிங்காரவடிவேலுவும் சிறிது நேரம் பேசிக் கொண்டு இருந்தனர்.

தஞ்சையில் தேர்தல் நேரத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் ஆற்றிய அரும்பணிக்கு மூப்பனார் பாராட்டு தெரிவித்தார். நாகை தொகுதி பற்றிக் குறிப்பிட்ட அவர் மேலும் ஒருமுறைபிரச்சாரம்செய்து இருந்தால் அங்கும் வெற்றி பெற்று இருக்கமுடியும் என்றார்.

விழாக் கூட்டம் நடத்தி வாக்காளர்களுக்கு நன்றி தெரிவிக்க ஏற்பாடுசெய்து இருப்பதாக முதல்வரிடம் மூப்பனார் தெரிவித்தார்.

இதற்கு வருகை தர வேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவரை மூப்பனார் அழைத்தார். கட்டாயம் வருவதாக முதல்வர் அவரிடம் தெரிவித்தார்.

நாகையிலும் வாக்காளர்களுக்கு நன்றி தெரிவிக்க விழா நடத்தஇருப்பதாக முதல்வர் தெரிவித்தார்.

முதல்வரிடம் மூப்பனாரும் சிங்காரவடிவேலுவும் விடைபெற்றபோது சிங்காரவடிவேலுவை முதல்வர் தட்டிக்கொடுத்து'வழி அனுப்பினார்.

தஞ்சைத் தொகுதியில் 20 இடங்களில் கழகத் தொண்டர்கள் தாக்கப்பட்டு இருப்பதாக தகவல் வந்துள்ளது என்றுஅமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினார்,

முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்ததற்கு முன்பு நேற்று காலை அமைச்சர் எஸ். டி. எஸ். வீட்டிற்கு சிங்காரவடிவேலுவும், மூப்பனாரும் சென்றனர்.

எஸ்.டி.எஸ்.சுக்கு மாலை அணிவித்து மகிழ்ச்சி தெரிவித்தனர்.

---

## திருவான்மியூரில் ஜேப்பியார் கொடி ஏற்றுகிறார்

24-6-79 ஞாயிறு காலை 8-30 மணிக்கு திருவான்மியூர் தந்தைபெரியார்நகர் (ஜெயந்தி தியேட்டர் அருகில்) ஜேப்பியார் கொடி ஏற்றுவார். ஜே. பாலன் மற்றும் பலர் பேசுவர்.

## ஊனமுற்றவர்க்கு சென்னை அரிமா சங்கம் சைக்கிள் உதவி

சென்னை, ஜூன் 21- சென்னை கிழக்கு பகுதி அரிமா சங்கத்தின் 11-வது ஆண்டுவிழா நேற்று நடைபெற்றது.

விழாவின் போது உடல் ஊனமுற்றோருக்கு மூன்று சக்கர சைக்கிளும் ஊன்றுகோலும், ஊனமுற்ற பெண்ணுக்கு படிப்பு உதவித்தொகையும் வழங்கினர்.

விழாவுக்கு டாக்டர் நஞ்சுண்டராவ் தலைமை தாங்கினார். கந்தசுப்பிரமணியம், சீனிவாசன், விஜயகுமார், கல்யாணசுந்தரம், முத்துசுவாமி, நீலகண்டன், வெங்கடராமன், ரமணி, சுப்புலட்சுமிகிருஷ்ணன், ஆகியோர் பேசினர். எஸ்.விசுவநாதன் நன்றி கூறினார்,

## நாகையில் பெண்கள் சித்ரவதை

நாகை தொகுதியில் வீட்டிற்குள் இருந்தவர்களை பார்க்கவிடாமல் தடுக்கப்பட்டு வீட்டுக்கதவுகள் பூட்டப்பட்டன. வீடுவீடாகப் பிரச்சாரம் செய்யப்போன போது தி. மு. க. வினர் அதனைத்தடுக்க முயன்றனர் என்றும் புரட்சித்தலைவர் கூறினார்.

இரட்டை இலைக்கு ஓட்டுப்போட்டதற்காக இரண்டு இளம் பெண்கள் துன்புறுத்தப்பட்டு தாக்குதலுக்கு ஆளாகியதாக தகவல் வந்துள்ளதாகவும் முதல்வர் தெரிவித்தார்.

தஞ்சைத் தொகுதியில் ஒரு குறிப்பிட்டஇடத்தில் நிற்காமல் நான் சென்றுவிட்டேன். அதனைத் தெரிந்து கொண்ட கருணாநிதி அந்த இடத்திற்குச் சென்று ஓட்டுக்கேட்டு இருக்கிறார். அப்படி இருந்தும் அந்த மக்கள் காங்கிரஸ் வேட்பாளருக்கே வாக்கு அளித்து இருக்கிறார்கள்.

## வெற்றி விழா

தஞ்சையில் வெற்றி

## சிங்காரவடிவேலு பேட்டி

முதல்வர் புரட்சித் தலைவரின் அயராத உழைப்பே எனக்கு வெற்றியைத் தேடித் தந்தது என்று தஞ்சை வெற்றி வீரர் சிங்காரவடிவேலுகூறினார்.

அவர் மேலும் கூறியதாவது:-

தமிழ் நாட்டில் அனைத்திந்திய அண்ணா திமுகழக ஆட்சி ஊழலற்ற ஆட்சி என்ற உண்மையைமக்கள் அங்கீகரித் திருக்கிறார்கள். திமுகமீது இருக்கும் அதிருப்தியையும் மீண்டும் வெளிப்படுத்தி யிருக்கிறார்கள் என்று கூறினார்.

---





---

# சிமெண்டில் கலப்படம்-114 மூட்டை பறிமுதல்: தி.மு.க. வியாபாரி கைது

சென்னை, ஜூன் 21- சிமெண்டில் கலப்படம் செய்ததாக தி.மு.க.வைச் சேர்ந்த வியாபாரி ஒருவர் கைது செய்யப்பட்டுள்ளார்.

இவரிடமிருந்து கல் அரைக்கும் மிஷினும் 114 மூட்டை கலப்பட சிமெண்டும் பறிமுதல் செய்யப்பட்டன. இதுபற்றிய விவரம் வருமாறு:-

சென்னை சூளைமேடு தமிழர் வீதியிலுள்ள கன்னைய செட்டியார்(வயது45) என்பவர் கலப்பட சிமெண்ட் விற்பதாக போலீசுக்கு தகவல் தெரியவந்தது.

சூளை மேடு காவல்நிலைய சப்-இன்ஸ்பெக்டர் திருசங்கு அந்த வியாபாரியின் வீட்டை திடீர் சோதனையிட்டார். வியாபாரி கன்னைய செட்டியார் தி.மு.க,வைச் சேர்ந்தவர் என்பதுகுறிப்பிடத்தக்கது.

திடீர்சோதனையில் வியாபாரியின் வீட்டில் 114 மூட்டைகலப்பட சிமெண்ட் இருந்தது கண்டு பிடிக்கப்பட்டு பறிமுதல் செய்யப்பட்டது.

தி.மு.க. வியாபாரி சேலத்திலிருந்து ஒரு வித கல்லை வரவழைத்து இங்கேயே அரைத்து கலப்படம் செய்துவந்தாராம், சிமெண்ட் நிறத்திலுள்ள கற்களை அரைக்க இவர் வைத்திருந்த மிஷினையும் பறிமுதல் செய்தனர்.

தி. மு. க. வியாபாரி கன்னைய செட்டியாரை கைது செய்து வழக்கு தொடர்ந்துள்ளனர்.

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வைசண்முகம் சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் :பி தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை-600004.
ஆசிரியர்: எம்.ஜி. சக்ரபாணி

## கருணாநிதியின் இடம் எது என்பதை தஞ்சைத் தொகுதி காட்டி விட்டது

## தி. மு. க. அரசை டிஸ்மிஸ் செய்தது நியாயம் என்பதே தஞ்சைத் தீர்ப்பு

## புரட்சித் தலைவரின் பக்கமே தமிழகம் இருக்கிறது

# கழகத்தின் பலம் கூடியுள்ளது

## தஞ்சை - நாகைத் தொகுதி தீர்ப்பு பற்றி "மெயில்" ஏடு தலையங்கம்

சென்னை, ஜூன் 21-அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தின் பக்கம்தான் தமிழகம் இருக்கிறது என்பதையும் கருணாநிதியின் இடம எது என்பதையும் தஞ்சை, நாகை இடைத்தேர்தல் தீர்ப்பு சுட்டிக்காட்டி விட்டது என்று மெயில் ஏடு தலையங்கத்தில் கூறியுள்ளது. தஞ்சை, நாகை இடைத்தேர்தல் தீர்ப்பு குறித்து மெயில் ஆங்கில தினசரி 19-6-79 இதழில் எழுதியுள்ள தலையங்கம் வருமாறு :-

ஒரு ஆளும் கட்சியின் செல்வாக்கு தொடர்கிறதா அல்லது தேய்கிறதா என்பதற்கான உரைகல்லாகவே இடைத்தேர்தல் முடிவுகள் கருதப்படும். இந்த அடிப்படையில் பார்த்தால் தஞ்சையில் இ. காங்கிரசும், நாகையில் கம்யூனிஸ்டு கட்சியும் வெற்றி பெற்றிருந்தாலும், தேர்தல் முடிவுகள் காட்டும் திசை வெற்றி அனைத்திந்திய அண்ணா தி.மு.க. மகிழும் விதத்திலேயே அமைந்திருப்பதைக்காண முடியும்.

தஞ்சை-நாகை இரு தொகுதிகளிலும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழத்துக்கு ஆதரவாக இம்முறை அதிகமான வாக்குகள் பதிவாகியுள்ளன.

தஞ்சையில் இ. காங்கிரஸ் வெற்றி பெற்றிருந்தாலும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் மகத்தான ஆதரவுதான் இ. காங்கிரஸ் வெற்றிக்கு காரணம் ஆகும்.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் ஆதரவை இ. காங்கிரஸ் விரும்பிப்பெற்று போட்டியில் இறங்கி அதன் மூலம் வெற்றி பெற்றுள்ளது. இ. காங்கிரசில் நிலவிய பூசல்களுக்கும் விடுமுறை கொடுக்கப்பட்டு இ. காங்கிரசார் அனைவரும் ஒருமித்து பணியாற்றினார்கள். இந்திரா காந்தியின் பிரச்சாரத்தால் வழக்கமாக காங்கிரசை ஆதரிக்கும் வாக்காளர்களின் ஆதரவும் கிடைத்தது.

ஆனால் அனைத்திந்திய அண்ணா திமுகழகத்தின் ஆதரவு இல்லாமல் போயிருக்குமானால் இ. காங்கிரசுக்கு மற்ற அம்சங்கள் சாதகமாயிருந்திருந்தால் கூட பயனற்றுப் போயிருக்கும்.

இதில் தஞ்சைத் தொகுதியைப் பற்றி தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். போட்ட மதிப்பீடுகள்தான் சரியானவை என்பதை தேர்தல் முடிவுகள் காட்டி விட்டன.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் பக்கம் அல்லது அதன் ஆதரவைப் பெற்ற கட்சிகளின் பக்கம்தான் ஆதரவு என்பதை தஞ்சாவூர் நிரூபித்து விட்டது.

ஆனால் தி. மு. கழகம் பெரிதும் நம்பிக்கை வைத்திருந்தது. அனைத்திந்திய அண்ணா திமுக அரசுக்கெதிராக எல்லாவகையான குற்றச் சாட்டுக்களையும் கருணாநிதி சுமத்தினார். ஆனால் கருணாநிதியின் குற்றச் சாட்டுக்களுக்கு மதிப்பு கொடுக்க வாக்காளர்கள் மறுத்து விட்டனர்.

தி. மு. கழக மந்திரி சபையை டிஸ்மிஸ் செய்து, கருணாநிதிக்கும் மற்ற அமைச்சர்களுக்கும் எதிராக சர்க்காரியா கமிஷனை நியமித்தவர் இந்திரா காந்தி அந்த இ. காங்கிரசின் வேட்பாளர்தான் போட்டியிட்டார்.

இ. காங்கிரஸ் வேட்பாளருக்கு வெற்றி அளித்ததன் வாயிலாக கருணாநிதி அரசுக்கு எதிராக எடுக்கப்பட்ட நடவடிக்கைகளை மக்கள் ஏற்று ஒப்புதல் அளித்திருக்கிறார்கள் என்றே கொள்ள வேண்டும்.

மக்களின் ஆதரவு தொடர்ந்து நீடிப்பது கண்டு அனைத்திந்திய அண்ணா திமுக மகிழ்ச்சியடைகிற அதே நேரத்தில் தி. மு. க. வும் கருணாநிதியும் வேதனைப்பட வேண்டிய நிலையில் உள்ளனர். "என் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை தவறு. இதோ வாக்காளர்கள் எனக்கு வாக்களித்துவிட்டார்கள்" என்றுசொல்லிக்காட்ட கருணாநிதிக்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது.

ஆனால் வாக்காளர்களுக்கு உண்மை தெரியும். ஆகவே, வாக்காளர்கள் தி.மு.க.வை ஆதரிக்க மறுத்தனர். **கருணாநிதிக்கு உரிய இடம் எது என்பதை மக்கள் உணர்த்தி விட்டனர்**

நாகை தொகுதி கம்யூனிஸ்டுகளின் செல்வாக்கில் இருந்து வந்த தொகுதி. முன்பு அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்துடனும் இப்போது தி. மு. கழகத்துடனும் கம்யூனிஸ்டு கட்சி உறவு கொண்டிருக்கிறது.

கம்யூனிஸ்டு கட்சியிடம் ஏற்பட்ட இந்த மாறுதலையும் மக்கள் கவனித்தார்கள். அதன் காரணமாக கம்யூனிஸ்டு கட்சியின் பெரும்பான்மை குறைந்து விட்டது. கம்யூனிஸ்டு கட்சிக்கு வழக்கமாக வாக்கு அளித்தவர்களைத் தவிர புதிய ஆதரவைத் திரட்டித்தர திமு கழகத்தினால் இயலவில்லை,

அதே நேரம் அனைத்திந்திய அண்ணா திமு கழகத்துக்கு வாக்குகள் கூடியுள்ளன என்பதையும், கம்யூனிஸ்டு பிடிப்புள்ள இடங்களில் அனைத்திந்திய அண்ணா தி.மு.க. நுழைந்துவிட்டது என்பதையும் காண முடிகிறது.

அகில இந்திய கட்சிகள் எனப்படுபவை தமிழகத்தில் ஏதேனும் ஒரு மாநிலக் கட்சியின் துணை இல்லாமல் தேர்தலில் போட்டியிட முடியாத நிலை இருந்து வருவது ஒப்புக்கொள்ளப்பட்ட நடைமுறையாகி விட்டது.

தமிழகத்தில் காணப்படும் இந்த நடைமுறை மற்ற இடங்களுக்கும் பரவி வருகிறது. இதனால் அரசியலில் புதிய துருவம் உருவாகி வருகிறது.

ஜனதாவைப் பொறுத்தவரை இந்த தேர்தல் அவர்களுக்கு சரியான பாடத்தைக் கற்றுக்கொடுத்திருக்கிறது. கடந்த இரண்டு ஆண்டுகளாக ஜனதா மத்திய ஆட்சியில் இருந்தபோதிலும் கூட ஜனதாக் கட்சி தமிழகத்திலும் இருக்கிறது என்ற நினைவே எழவில்லை.

தவறான சக்திகளுடன் கைகோர்த்து அதன் மூலம் தமிழக ஜனதா மேலும் நிலைமைகளை மோசமாக்கியிருக்கிறது கேரளத்திலும் கருநாடகத்திலும் பிளவுபட்டுள்ள இ, காங்கிரசுக்கு தஞ்சை வெற்றி உற்சாகம் தருவதாக இருக்கலாம்.

ஆனால் தஞ்சை வெற்றி இ. காங்கிரசின் வெற்றி என்று கருதத்தக்கது அல்ல. தஞ்சை போட்டி அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்துக்கும், தி, மு. கழகத்துக்கும் இடையே நடந்த போட்டியாகும். இதில் அனைத்திந்திய அண்ணா தி. மு. க., தி. மு. கவின் இடம் எது என்பதைக் காட்டிவிட்டு அனைத்திந்திய அண்ணா தி. மு. க வெற்றி வீரனாக வந்துள்ளது.

இவ்வாறு மெயில் ஆங்கில தினசரி தனது 19-6-79 இதழில் வெளியான தலையங்கத்தில் கூறுகிறது.

---

அமைச்சர் ராஜாமுகமது தகவல்

# ஜப்பான் கூட்டுறவுடன் ரூ. 35 கோடி செலவில் கனரகத் தொழில்கள்

பரமக்குடி, ஜூன் 21 முதல்வர் புரட்சித்தலைவர் வெளிநாடு சென்று வந்ததன் பலனாக ரூ. 35 கோடி செலவில் ஜப்பான் நாட்டு கூட்டுறவுடன் தமிழகத்தில் கனரகத் தொழில்கள் துவக்கப்பட உள்ளன என்று அமைச்சர் ராஜாமுகமது தெரிவித்தார்.

ராமநாதபுரம் மாவட்ட தொழில் மையத்தின் சார்பில் சிறு தொழில் கருத்தரங்கு பரமக்குடி சிவஞானம் செட்டியார் கல்யாண மண்டபத்தில் நடை பெற்றது.

மாவட்ட ஆட்சித்தலைவர் சா. சுப்பிரமணியம் தலைமை தாங்கினார்.

தொழில் மைய பொது மேலாளர் செல்வி தங்கம் அனந்த கிருஷ்ணன் வரவேற்றார்.

கருத்தரங்கைத் துவக்கி வைத்து ஊரகக் தொழில் அமைச்சா கா. ராஜா முகமது பேசினார். அப்போது அவர் கூறியதாவது:-

வணிக வளர்ச்சி இல்லாமல் தொழில் வளர்ச்சி சாத்தியம் இல்லை. சுதந்திரமான வணிக வளர்ச்சி வேண்டும்.

பஞ்சாயத்து, நகராட்சி போன்றவைகள் ஆறு மாதத்திற்குள் தொழில் பகுதிகளை அறிவிக்க வேண்டும் என்று அரசு உத்தரவிட்டிருக்கிறது.

இந்த பகுதிகளில் 5 குதிரைச் சக்திவரை உள்ள மின்சாரத்தை மின்இலாகாவிடம் நேரடியாக தொடர்பு கொண்டு வாங்கலாம். தொழில் தொடங்குவதிலும் சிரமம் இராது.

நலிவுற்ற தொழிற்சாலைகளுக்கு உதவிட இந்த ஆண்டு சிப்காட் மூலம் ரூ. 50 லட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டு உள்ளது.

தொழில்ரீதியாக பின்தங்கிய பகுதிகளில் சிறு தொழில்கள் ஆரம்பிக்க மத்திய அரசு 15சதம் மானியம் தருகிறது.

அதுபோல, மாநில அரசு சிறு தொழில்களுக்கு 35 சதம் வரை மானியம் அளிக்க இருக்கிறது.

இதற்காக 35 தாலுகாக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு ஒரு மாதத்தில் அறிவிக்கப்படும். இதற்காக ரூ. 80 லட்சத்தில் இருந்து ஒரு கோடி ரூபாய் வரை ஒதுக்கீடுசெய்யப்பட்டு உள்ளது

இந்த அரசுக்கு தொழிற்கொள்கை இருக்கிறதா என்று சிலருக்கு குழப்பமாக இருக்கிறது.

நடைமுறைக்கு சாத்தியமான தொழிற்கொள்கை இந்த அரசுக்கு இருக்கிறது.

சிறு தொழில்கள் வளரவேண்டுமென்றால் மத்திய தொழில்கள் வளரவேண்டும், மத்தியத் தொழில்கள் வளர கனரகத் தொழில்கள் தேவை.

முதல்வர் புரட்சித் தலைவர் வெளிநாடு சென்று வந்ததன் பயனாக ஜப்பானிய ஒத்துழைப்புடன் ரூ.35கோடி செலவில்கனரகத்தொழிற்சாலை ஆரம்பிக்க இருக்கிறோம். இதற்காக ஒரு தனி அலுவலரைநியமித்து இருக்கிறோம்.

இந்த அரசின் முயற்சியால் தமிழகத்தில் ரூ. 6 கோடி செலவில் வேலண்ட் விரிவாக்க தொழிற்சாலை வர இருக்கிறது. ஊட்டியில் கலர் பிலிம் யூனிட் வர இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது பேசினார்.

---

வியாசர்பாடியில் கட்டப்படும்

# பர்மா தமிழர் வீடுகளை அமைச்சர் பி. டி. எஸ். பார்வையிட்டார்

சென்னை, ஜூன் 21–கடந்த 14 ஆண்டுகளாக தீர்க்கப்படாத, தாயகம் திரும்பிய பர்மா தமிழர்களுக்கு வீடு கட்டித்தரும் பிரச்சினையை கழக அரசு தீர்த்து வைத்தது. இவர்களுக்காகக் கட்டப்படும் வீடுகளை அமைச்சர் பி. டி. எஸ். பார்வையிட்டார்.

பர்மாவிலிருந்து தாயகம் திரும்பிய தமிழர்கள் வியாசர்பாடி பகுதியில் கடந்த பல ஆண்டுகளாக வசித்து வருகின்றனர். 1964-ம் ஆண்டு முதல் தங்களுக்கு வீடுகள்கட்டித் தருமாறு மாநில அரசிடம் இவர்கள் கோரிக்கை விடுத்து வந்தனர். 14 வருட காலமாக தீராத அவர்களது பிரச்சினை முதல்வர் புரட்சித் தலைவர் அரசில் தான் தீர்த்து வைக்கப் பட்டிருக்கிறது. அவர்களுக்கு தனித்தனி வீடுகள் கட்டித்தர புரட்சித் தலைவரின் அரசு உத்தர விட்டிருப்பது தெரிந்ததே. இத்திட்டத்திற்காக மத்திய அரசு ரூ. 1.77 கோடி ஒதுக்கித் தந்துள்ளது.

'தாயகம் திரும்பிய பர்மா தமிழர்களுக்காக கட்டப்படும் வீடுகளை மறுவாழ்வுத்துறை அமைச்சர் பி.டி.எஸ். மறுவாழ்வுத் துறை இயக்குனர் சந்திரஹாசன் ஆகியோர் நேற்று பார்வையிட்டனர்.

வியாசர்பாடி பகுதியில் பர்மா தமிழர்களுக்காக சுகாதார நிலையம், குழந்தைகள் காப்பகம், பள்ளிக்கூடம், விளையாட்டு மைதானம் ஆகியவையும் உருவாக்கப்படுகின்றன.

வியாசர்பாடி பகுதியில் பர்மாதமிழர்களுக்காக 3132 வீடுகள் கட்டப்பட இருக்கின்றன. முதல் கட்டமாக 600வீடுகள் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். சுகாதார நிலையம், 9 குழந்தை காப்பகங்கள்ஆகியவை கட்டி முடிக்கப்படும் நிலையில்உள்ளன. இவைகளை அமைச்சர் பி. டி. எஸ். பார்வையிட்டார.

5 லட்சம் ரூபாய் செலவில் கட்டி முடிக்கப்படும் நிலையில் உள்ள உயர்நிலைப் பள்ளிக் கட்டிடத்தையும் பார்வையிட்டார்.



அமைச்சர் பி. டி. எஸ். பார்வையிட்டார்.

குடியிருப்புகளுக்குச் செல்லும் வகையில் வசதியாக அமைக்கப்பட்டுள்ள சாலைகளையும் அமைச்சர் பார்வையிட்டார்.

## துரித பணி

வேலைகளை துரிதமாக முடிக்குமாறு தலைமைப் பொறியாளரையும், இளநிலைப் பொறியாளரையும் மற்றும் அதிகாரிகளையும் அமைச்சர் கேட்டுக்கொண்டார்.

அமைச்சர் பி. டி. எஸ். வந்திருப்பதைக்கேள்வியுற்ற பர்மா தமிழர்கள் திரண்டு வந்து அமைச்சருக்கு மாலை அணிவித்து மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டனர்.

புரட்சித் தலைவரின் தலைமையிலான இந்த அரசில் தான் எங்களது பிரச்சினைகள் தீர்க்கப்பட்டன என்று அவர்கள் கூறினர்.

---






## ராஜா முகமது இலங்கை பயணம்

சென்னை, ஜூன் 21- அனைத்துலக இஸ்லாமிய தமிழ் கலாச்சார மாநாடு இம் மாதம் 29, 30-ஜூலை 1-ந் தேதிகளில் இலங்கையில் நடக்கிறது. இந்த மாநாட்டில் பங்கேற்பதற்காக அமைச்சர் ராஜா முகமது இம்மாதம் 28-ந் தேதி இலங்கை செல்கிறார்.

## திருமணம்

ஆண்டிமடம், ஜூன் 21- கழகத் தோழரும், பெரிய கிருஷ்ணாபுரம் மாணிக்கத்தின் மகன் சுப்பிரமணியத்துக்கும், பெண்ணாடம் தெய்வசிகாமணியின் மகள் அனுசூயாவிற்கும் இம்மாதம் 23ந்தேதி (சனிக்கிழமை) காலை 8 மணிக்கு ஆண்டிமடம் சண்முகம் திரையரங்கில் திருமணம் நடக்கிறது.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், சட்டமன்ற உறுப்பினர்கள் சுப்பிரமணியம், கே. சவுந்தரராசன், வி. கருணாமூர்த்தி, கோ. ராமநாதன் மற்றும் பலர் மணமக்களை வாழ்த்திப் பேசுகின்றனர்.

கழக அடலேறு பூலாவரி சுகுமாரனை துடிக்க துடிக்க சுட்டுக் கொன்ற வழக்கு

# திமுக. எம்எல்சி. விடுதலையை எதிர்த்து ஐகோர்ட்டில் அப்பீல்

★ தமிழ் நாடு அரசு தாக்கல் செய்தது ★

**சென்னை, ஜூன் 21- கழக செயல் வீரன் பூலாவரி சுகுமாரனையும், அவரது தந்தை பழனியப்பனையும் துப்பாக்கியால் சுட்டுக்கொன்றது சம்பந்தமான வழக்கில் தி. மு. க. எம். எல். சி. வீரபாண்டி ஆறுமுகம் விடுதலை செய்யப்பட்டதை எதிர்த்து உயர்நீதி மன்றத்தில் அரசு அப்பீல் செய்துள்ளது.**

சேலம் மாவட்டத்தைச் சேர்ந்தவீரபாண்டி அருகே யுள்ள பூலாவரி கிராமத்தைச் சேர்ந்த கழக செயல் வீரன் பூலாவரி சுகுமாரனும் அவரது தந்தை பழனியப்பனும் தி.மு.க. வினரால் துப்பாக்கியால் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

கருணாநிதி முதலமைச்சராக இருந்தபோது 24-6-74 அன்று இச்சம்பவம் நடந்தது.

பூலாவரி சுகுமாரனும் அவரது தந்தை பழனியப்பனும் கழகப்பொதுக்கூட்டத்தை முடித்து விட்டு நள்ளிரவு மோட்டார் சைக்கிளில் வீடு திரும்பும்போது தி. மு. க. எம்.எல்சி. வீரபாண்டி ஆறுமுகத்தின் கூட்டத்தினரால் துப்பாக்கியால் சுடப்பட்டதாக கூறப்படுகிறது.

பூலாவரி சுகுமாரனும் அவரது தந்தையும் மோட்டார் சைக்கிளில் வீடுதிரும்பும்போது வயல் காட்டின் பக்கத்தில் ரோட்டின் குறுக்கே கட்டை, கற்களைப்போட்டு வழிமறித்தனராம்.

பூலாவரி சுகுமாரனும் பழனியப்பனும் தடைகளை எடுத்து விட்டு வீட்டிற்குச் செல்லும் முயற்சியில் ஈடுபட்டபோது மறைந்திருந்த வீரபாண்டி ஆறுமுகத்தின் ஆட்கள் சுகுமாரனையும், பழனியப்பனையும் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றதாக கூறப்படுகிறது-

இந்த இரட்டைக் கொலைநடைபெற்றபோது வீரபாண்டி ஆறுமுகம் எம். எல். ஏ. வாகவும், சேலம் மாவட்ட தி.மு.க. செயலாளராகவும் இருந்தார்.

இக்கொலை சம்பந்தமாக வீரபாண்டி ஆறுமுகம், அவரது தம்பி குப்புசாமி உட்பட 13 பேர் மீது வழக்குத் தொடரப்பட்டது.

திமுக ஆட்சியில் சம்பவம் நடந்த 6 மாதத்தில் துப்புக் கிடைக்கவில்லை என்று போலீசாரால் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

கருணாநிதி ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட்ட பின்னர் ஜனதியதி ஆட்சியில் மீண்டும் இந்த கொலை பற்றிய சம்பவம் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

இந்த வழக்கு விசாரணை கிருஷ்ணகிரி தனிகோர்ட்டில் நடைபெற்றது.

## அப்பீல் தாக்கல்

வழக்கை விசாரித்த செசன்சு நீதிபதி ஆர். ரங்கராஜன் ''இந்த கொடுரமான- ஈவிரக்கமற்ற மூர்க்கத்தனமான இரட்டைக் கொலை பற்றிய வழக்கு பலவித ஊகங்களுக்கு இடம் தரக்கூடிய காரணங்களால் துப்பு துலக்க முடியவில்லை என்று கூறப்பட்டு 1975-ம் ஆகஸ்டில் கைவிடப்பட்டதானதுமிக மிக துரதிருஷ்ட வசமானது'' என்று தீர்ப்பில் கூறியுள்ளார்.

மேலே கண்ட தீர்ப்பு கடந்த மார்ச் மாதம் 29ந் தேதியன்று கூறப்பட்டது. வழக்கில் சம்பந்தப்பட்ட அனைவரும் விடுதலை செய்யப்பட்டனர்.

தீர்ப்பை எதிர்த்து சென்னை உயர்நீதிமன்றத்தில் அரசு அப்பீல் செய்துள்ளது. மனுவை அரசு தரப்பு வழக்கறிஞர் பி. ராஜமாணிக்கம் நேற்று தாக்கல் செய்தார்.